# பகவத் பாதை

Sri Bagavath Mission
Flow with the Flow

## Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

பாதை - 1 | 2011 / டிசம்பர் | மலர் - 3

தனிச்சுற்றுக்கு மட்டும்




Sri Bagavath

நமது மனது எதைக் காட்டுகிறதோ அதை மட்டுமே நாம் அறிகிறோம். நமது மனது எப்படிக் காட்டுகிறதோ, அப்படிமட்டுமே நாம் புரிந்து கொள்கிறோம்.

- ஸ்ரீபகவத்



ஆசையின் பரிமாணங்கள்

## Liberated Mind and Struggling Mind
## விடுதலையுற்ற மனமும் போராட்ட மனமும்

- ஸ்ரீ பகவத்

உலகமே துக்கமயமாக இருப்பதைக் கண்ணுற்ற புத்தர், அதற்குத் தீர்வுகாண முயன்றார்.

தவ முயற்சிகளை மேற்கொண்டார். தவத்திற்குத் தகுந்தாற்போல், உணவையும், வாழ்க்கை முறையையும் மாற்றிக் கொண்டார். விரதங்களையும் இயமநியமங்ளையும் மேற்கொண்டார்.

புத்தருடைய தவமுயற்சிகள் அவருக்கு அருமையான அனுபவங்களையெல்லாம் கொடுத்தன. ஆன்மீக அனுபவங்களுடைய தகுதியைப் பற்றி நமக்குத் தெரியும். அத்தகைய அனுபவங்கள் நமக்கு ஏற்படும்போது நாம் மிகவும் உற்சாகமடைந்துவிடுவோம். நம் மனது மிகவும் மென்மையாகிவிடும். இனிமையான அனுபவங்கள் மட்டுமே நமக்கு ஏற்படும். அந்நிலையில் நமக்கு ஏற்படும் பிரச்சனைகளின் தாக்கம் அனைத்தும் பலமிழந்துவிடும்.

நாம் ஆனந்தமாக இத்தகைய தவமுயற்சிகளில் ஈடுபடும்போது, நமது பிரச்சினைகள் அனைத்தும் வாசலுக்கு வெளியே அமைதியாகக் காத்துக்கொண்டிருக்கும். நமது தவமுயற்சிகளின்பலம் நம்மைவிட்டுப் போனதும் நமது பிரச்சினைகள் எல்லாம் இரண்டு மடங்கு வேகத்தில் நம்மையடைந்து நம்மைத் தாக்க ஆரம்பிக்கும்.

இப்படி ஆனந்த அனுபவங்களாலும், சரியான தீர்வைக் கண்டுபிடிக்க முடியாமல் திணறினார் புத்தர். தவமுயற்சிகளை அதிகப்படுத்தினார். அவரது ஆரோக்கியம் கெட்டது தான் மிச்சம்; தேடிய தீர்வு அவருக்குக் கிடைக்கவில்லை.

முட்டிமுட்டிப் பார்த்து மனமுடைந்துவிட்டார். அவர் எடுத்த அத்தனை முயற்சிகளும் தோல்வியடைந்து விட்டதாக உணர்ந்தார். அதற்குமேலும் அவரால் எந்த முயற்சியிலும் ஈடுபடமுடியவில்லை.

ஏனெனில், சாத்தியப்பட்ட அனைத்து முயற்சிகளிலும் இறங்கி, தோல்வியையே தழுவிவிட்டார். இனி அவர் செய்வதற்கு எந்த முயற்சியும் பாக்கியில்லை. போரில் தோல்வியடைந்து, படைவீரர்களையும், ஆயுதங்களையும் இழந்த மன்னனைப்போல், மனமுடைந்த நிலையில் ஒருவிதமான கையறுநிலையில் ஒரு மரத்தின் அடியில் செய்வதறியாது உறைந்துபோய் உட்கார்ந்துவிட்டார்.

அந்நிலையில், அவர் எதனைத்தேடி இத்தனை முயற்சிகளில் ஈடுபட்டுப் போராடினாரோ, அந்தத்தீர்வு தாமாக அவருக்குக் கிடைத்தது.

புத்தர் ஆச்சரியப்பட்டுப்போனார். எத்தனையோ பயிற்சிகளிலும், முயற்சிகளிலும் ஈடுபட்ட போதும் கிடைக்காத ஒன்று, எதுவும் பண்ணாமல், தோற்றுப்போய் சும்மா உட்கார்ந்திருக்கும்போது எப்படிக் கிடைத்தது என்று அவர் ஆச்சரியமுற்றார்.

ஆனால் அது அவருக்கு அப்படித்தான் கிடைத்துவிட்டிருந்தது. அவருக்குப் புரியவில்லை. ஏதாவது முயற்சி செய்து, அதன் பலனாக நமக்கு ஏதாவது கிடைத்திருந்தால் அது நமக்கு ஆச்சரியத்தைத் தராது. நமது தரப்பில் நாம் எதையுமே செய்யாத நிலையில், நாம் தேடிய ஒன்று நமக்குக் கிடைத்ததென்றால் எவர் தான் நம்புவார்? தனக்கு என்னதான் நேர்ந்தது, தனக்கு எப்படி அது கிடைத்தது - என புத்தர் தனக்குள் மூழ்கி, தான் அடைந்ததன் இரகசியத்தைப் புரிந்து கொண்டார். தான் எதைப்புரிந்து கொண்டாரோ அதை சமுதாயத்துக்கும் பயன்படும் கருத்தாக வழங்கினார்.

"ஆசையே நமது துன்பங்களுக்கெல்லாம் காரணம்; ஆசையை விட்டுவிட்டால், துன்பங்களிலிருந்து விடுபட்டுவிடலாம்".

- இப்படி அவர், தான் கண்டறிந்த உண்மையை, உலகத்தவர் அறிந்திட எடுத்துரைத்தார்.

புத்தருடைய போதனை என்ன என்று ஒரு ஆரம்பப் பள்ளிக்கூட மாணவனைக் கேட்டால் கூட சொல்லிவிடுவான். 'ஆசையே துன்பத்துக்குக் காரணம்' என்ற அவரது போதனை, அனைவரும் அறிந்த சர்வ சாதாரணமான செய்தி.

அதைத் தெரிந்துகொண்டதால் நமது பிரச்சினைகள் தீர்ந்துவிடுகின்றனவா? அதைத் தெரிந்து கொண்டதால் நமது துன்பங்கள் மறைந்துவிட்டனவா?

உண்மையில், அன்று புத்தர் கண்டுபிடித்த உண்மை அதுவன்று. 'ஆசையே துன்பத்துக்குக் காரணம்' என்ற கருத்து ஒரு மேம்போக்கான செய்தியே.

ஆனால் அன்றைய சூழ்நிலையில், அவரால் அத்தகைய சொற்களைப் பயன்படுத்தித்தான் அப்படிக் கூறமுடிந்தது.

அவர் அதுவரை ஏதோ ஒரு தீர்வை நாடி முயற்சி செய்திருந்தார். ஏதோ ஒன்றைத்தேடி ஓடிக்கொண்டிருந்தார். எதுவும் சாத்தியப்படாதநிலையில் அப்படியே உட்கார்ந்துவிட்டார். தேடித்தேடிக் களைத்துப்போன அவருடைய மனதால் மேலும் எதனையும்தேட முடியவில்லை. தேடித் தவித்துக்கொண்டிருந்த மனது தேடுதலைக் கைவிட்டுவிட்டது.

தேடுதலை விட்டுவிட்ட மனது என்ன செய்யும்? தேடுதலை நிறுத்திக்கொண்டதால் மனம் இல்லாமல் போய்விடுமா? தேடுதலை நிறுத்திக்கொண்டதால் மனம் செயல்படாமல் போய்விடுமா?

அது செயல்படத்தான் செய்தது; ஆனால் இப்போது அது வேறு விதமாகச் செயல்பட்டது. தேடித்தேடி ஓடிக்கொண்டிருந்த மனம், தேடுதல் இல்லாமல் செயல்பட்டது. அது தனது செயல் முறையை மாற்றிக் கொண்டுவிட்டது. அது இப்போது எதையும் தேடாததால், அது தனக்குள் ஏற்படும் எந்த உணர்வையோ, நினைவையோ பிடித்து வைக்கவில்லை. தனக்குள் ஏற்படும் எந்த உணர்வின் மீதும் தனித்த அக்கறை காட்டவில்லை. எந்த உணர்வுகளின் மீதும் அக்கறை காட்டப்படாததால், எந்த உணர்வுகளாலும் அங்கு தங்கியிருக்க முடியவில்லை.

அதற்கு ஆசையற்ற மனம் என புத்தர் பெயர் கொடுத்தார். நாமாக முயன்று, 'ஆசைப்படாமல் இருக்கும்' மனமல்ல அது. அந்த மனதில், ஆசை உட்பட எந்த உணர்வுமே தங்கியிருக்கவில்லை. அது ஆசைப்படாத மனதல்ல; அது ஆசை இல்லாத மனது.

அந்த மனதை அன்று புத்தர் தனக்குள் கண்டுபிடித்தார். அப்படி ஒரு வித்தியாசமானதொரு பரிமாணத்தில் அது தனக்குள் இயங்குவதைக் கண்டுபிடித்தார். அதை உலகுக்கும் தெரியப்படுத்தினார்.

அந்த நிலைக்கு நிர்வாணநிலை என்று பெயர் கொடுத்தார். நிர்வாண நிலை என்றால் என்ன? நிர்வாணம் என்பது எதைக் குறிக்கிறது?

நிர்வாணம் என்பது இயற்கையான நிலையைக் குறிப்பது; ஆடையோ, ஆபரணமோ எவற்றையும் அணியாது, எந்த அலங்காரமோ இல்லாமல் வெறுமையாக - இயற்கையாக இருக்கும் எளிய நிலையைக் குறிப்பது.

ஆனால் காலப்போக்கில் 'நிர்வாணநிலை' என்பது, ஒரு பிரம்மாண்டமான நிலை என்பதுபோல் விவரிக்கப்பட்டுவிட்டது. உண்மையில் அது ஒரு சாதாரணநிலை; நம் மனதின் இயற்கையானநிலை.

நம் மனதுக்கு இரண்டு விதமான நிலை உள்ளது. ஒன்று அதுவாகச்செயல்படும் இயற்கையான நிலை. அடுத்தது நாமாக மனதைச் செயல்படுத்தும் நிலை.

நாமாக மனதைச் செயல்படுத்தும்போது, அங்கு முயற்சி உள்ளது; , போராட்டம் உள்ளது; எதையாவது சாதிக்கவோ அல்லது அப்புறப்படுத்தவோ எடுக்கும் முனைப்பு உள்ளது.

- இதுதான் போராட்ட மனது; இதுதான் Struggling Mind. போராட்டம் இல்லாத நிலையில் இருப்பதுதான், இயற்கையான மனது. போராட்டங்கள் அனைத்தும் செயற்கையானதே.

போராட்டமற்று இயற்கையாக இருப்பதுதான் விடுதலையுற்ற மனது அல்லது Liberated Mind. இதுதான் இயற்கையான மனது. இது அடையப்படும் மனதன்று.

நாம் எதையாவது அடைந்தோமென்றால், அதை மீண்டும் இழந்துவிடுவோம். ஆனால் Liberated மனது என்பது இயற்கையானது. ஆகையால் அதனை அடையத்தேவையில்லை.

இதற்கு இடையூறாக இருப்பது நமது முயற்சியே. நமது முயற்சிகள் அனைத்தும் போராட்ட மனதையே கொண்டு வந்து விடுகின்றன. Liberated Mind வேண்டுமென்று முயன்றாலும், அது Struggling மனதையே கொண்டு வருகிறது.

நாம் நமது அன்றாட வாழ்வில் எத்தனையோ பணிகளில் ஈடுபடுகிறோம். நமது முயற்சிகளின்மூலம் நாம் அனைத்தையும் சாதித்துக் கொள்கிறோம்.

நமது முயற்சிகளுக்காக, நமது மனதையும் பயன்படுத்தி வருகிறோம். மனதின் உதவியில்லாமல் நம்மால் எதனையும் செய்யமுடியாது.

இப்படி, அன்றாட வாழ்க்கைக்குப் பயன்படுகின்ற, மனதையும் முயற்சியையும் – நம் மனதைச் சீரமைக்கவும் பயன்படுத்திவிடுகிறோம். Liberated Mind ஐ அடையவும் பயன்படுத்திவிடுகிறோம்.

மனதைச் சீரமைக்கும் முயற்சிகள் அனைத்தும் தவறானவை என்பதையும், பயனற்றவை என்பதையும் புரிந்து கொள்ளவேண்டும்.

மனதைச் சீரமைக்கும் முயற்சியை நாம் கைவிட்ட நிலையில், நம் மனம்,

தானாகச் செயல்படும் Liberated மனதாகிவிடுகின்றது.

Liberated மனது என்பது தேங்கிக் கிடக்கும் ஒரு மனமன்று. அது ஆற்றைப்போல் பிரவகித்து ஓடும் மனமாகும். ஓடுகின்ற ஆறு தன்னைத்தானே சுத்திகரித்துக் கொள்வதைப்போல் Liberated மனமும், பிரவாகமாக ஓடி, தன்னைத்தானே சுத்திகரித்துக் கொள்கிறது; சீரமைத்துக் கொள்கிறது.

இந்த Liberated மனது என்பது சாதாரணமானதா?
– அல்லது பிரம்மாண்டமானதா?

நம் அனைவருக்கும் ஆகாயம் என்றால் என்னவென்று தெரியும். ஆகாயம் என்பது சாதாரணமானதா பிரம்மாண்டமானதா என்று எவராவது நம்மைக் கேட்டால், நாம் என்ன பதில் சொல்வோம்?

இந்தப் பிரபஞ்சம் முழுவதும், இந்த ஆகாயத்தில் தான் மிதந்து கொண்டிருக்கின்றது. மிதப்பது மட்டும் அல்லாமல், இந்தப்பிரபஞ்சம், சூரிய மண்டலம், நட்சத்திர மண்டலம் அத்தனையும் காலங்காலமாக இந்த ஆகாயத்தினுள்ளே தான் பிரயாணம் செய்து வருகின்றன; முடிவில்லாமல் பிரயாணம் செய்து வருகின்றன.

இந்த ஆகாயம் அவ்வளவு பிரம்மாண்டமானது. அவ்வளவு பிரம்மாண்டமான ஆகாயத்தை நம்மால் அறிய முடியவில்லையா?

அந்த ஆகாயத்தை அறிந்துகொண்டு, அந்த ஆகாயத்தினுள்ளேதான் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். அத்தனை பிரம்மாண்டமான ஆகாயம், நாம் அறிந்து கொள்ளும் வகையில் சர்வசாதாரணமாகவும் இருக்கிறது.

இந்த Liberated மனது சர்வசாதாரணமானது என்பதால், இது அற்பமான ஒன்றல்ல.

Liberated மனதுதான் புத்தரை புத்தனாக்குகிறது; ஞானியை ஞானியாக்குகிறது.மனம் என்னும் ஆகாயமே இந்த Liberated மனமாகும். ●





## ஐயாவுடைய நிகழ்ச்சி

| | |
|---|---|
| 01-12-2011 முதல் 07-01-2012 வரை | - திருவண்ணாமலை |
| 08-01-2012 முதல் 11-01-2012 வரை | - சென்னை A.B.N. செல்வராஜ்,90804 29811 |
| 12-01-2012 முதல் 20-01-2012 வரை | - திருச்செந்தூர் |

- 21-1-2012, 23-01-2012 - திருச்சி - ஏற்பாடு
  – மனவளக்கலை பேராசிரியர் மீனாட்சி சுந்தரம்–9443166799
- 22-1-2012 - தஞ்சாவூர் - ஏற்பாடு
  – ரெய்கி மாஸ்டர் சதானந்தம் – 9003741221

## திருவண்ணாமலையில் ஐயாவை சந்திக்கும் முகவரி

108/21, T.S.R. நகர், மணக்குள விநாயகர் தெருவின் நீட்டிப்பு, (யோகிராம் சுரத்குமார் ஆசிரமம் மற்றும் அரசு கலைக் கல்லூரி விடுதிக்குப் பின்புறம்), திருவண்ணாமலை-606603.

போன் : 9944215677.

## பகவத் பாதையில் மலர்ந்த மலர்கள்

என் இனிய வாசகர்களே

எனக்கு வயது 40. சிறு வயது முதல், எனக்கு நினைவு தெரிந்த நாட்களிலிருந்து நான் என்னை அறியாமலேயே ஆன்மீகத் தேடுதலில் இருந்து வந்திருக்கின்றேன். விரதமிருப்பதும், கோயிலுக்குச் செல்வதும், வீட்டிலேயே அதிகமாக பூஜை செய்வதும், ஸ்தோத்திரங்கள் மனப்பாடம் செய்வதும், சொல்வதும் இப்படி என் சிறு வயதில் இருந்தே நான் எதையோ ஆன்மீகம் என்ற பெயரில் தேடிக்கொண்டிருந்தேன். இந்தத் தேடுதல் கடந்த 10 வருடங்களாக என்னை, பல குருமார்களிடம் கொண்டு சேர்த்தது. சிறுவயது முதல் 30 வருடம் வரை என் தேடுதல் கோயில், மந்திரம் சம்மந்தப்பட்டதாகவே இருந்தது.

வேதாத்ரி மகரிஷி அவர்களிடம் ஆரம்பித்த இந்த ஆன்மீகப் பயணம், அதிலிருந்து சுகபோதானந்தா, நித்யானந்தா, தயானந்த சரஸ்வதி, சத்குரு ஜக்கி வாசுதேவ் என்று பல குருமார்களிடம் மாறி மாறி என் ஆன்மீக தாகத்தைத் தணிக்க என்னை என் அறிவு அனுப்பியது. எல்லோருடைய ஆன்மீகக் கருத்துக்களும் 'Meditation' என்ற மையக்கருத்தையே அடிப்படையாகக் கொண்டு அமைந்திருந்தன. இப்படி இருந்தும் அவர்களுடைய ஞானக் கருத்துக்களைக் கேட்டு என்னுள்ளே அலசிப் பார்த்துக்கொண்டு இருந்தேனே தவிர Meditation தியானம் என்ற ஒன்றை மட்டும் தவமாக ஏனோ செய்யவில்லை. இருந்தும் என்னுள்ளே ஆன்மீகத்தாகம் குறைந்தபாடில்லை.

என் தேடுதல் தீவரமாகி, தமிழ்நாட்டில் உள்ள 250 "பாடல் பெற்ற" சிவ ஸ்தலங்களுக்குச் சென்று இறைவனிடம் "இறைவா, எனக்கு இறுதியான சத்தியம் என்ன என்பதை உணர வைப்பாயாக" என்று மனமுருகி பிரார்த்தனை செய்து வந்தேன். என்னுடைய கோயில் பிரார்த்தனை 3 மாதங்களில் முடிந்த நிலையில் ஒரு நாள் மாலை கும்பகோணம் கும்பேஸ்வரர் கோயிலில் இருந்து வெளியில் வந்து ஒரு புத்தகக் கடையில், சோகமும், அமைதியும் கலந்த மனநிலையில் எதற்கோ நுழைந்தபோது என் பிரார்த்தனை நிறைவேற்றப்பட்டதுபோல் "தியானத்தை விடு - ஞானத்தைப் பெறு" என்ற புத்தகம் என் விழிகளை அழைத்து "என்னைப் படி" என்று கூறுவதுபோல் என் உணர்வைச் சுண்டி இழுத்தது. மிகுந்த விதர்க்க உணர்வோடு அந்தப் புத்தகத்தை இறைவனின் பிரசாதமாக எண்ணி படிக்க ஆரம்பித்தேன்

அன்றே ஆரம்பித்து அடுத்த நாளில் படித்துமுடித்தேன். சொன்னால் நம்பமாட்டீர்கள். புத்தகம் படித்து முடித்தவுடன் அதை கீழே வைத்துவிட்டு சந்தோஷத்தின் மிகுதியால் குதித்தேன். என்னுடைய Close Friends இருவருக்கு Call செய்து உடனடியாக இதைப்பற்றிக் கூறினேன். என்னை யாராவது "நீ படித்த ஆன்மீக நூல்களிலேயே முதல் தரமான நூலாக எதைக் கூறுவாய்?" என்று கேட்டால் "தியானத்தை விடு ஞானத்தைப் பெறு" என்ற புத்தகம் என்றுதான் கூறுவேன்.

இந்தப் புத்தகம் நம்மை இந்த உலக வாழ்க்கையிலிருந்து வெளியில் எடுத்துச்செல்லாது. உலகியல் வாழ்வை இன்னும் சிறப்பாகவும், அதே சமயத்தில் மன அமைதியுடன் செயல்படவைக்கும். இதன் பிறகு ஸ்ரீ பகவத் ஐயாவுடன் தொடர்புகொண்டு, பேசி, பிறகு பார்த்து, அவர் எழுதிய அத்தனைப் புத்தகங்களையும் படித்து நான் கரையேறிவிட்ட நன்றி உணர்வினால் இதை எழுதுகிறேன்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மற்ற குருமார்களைப் போல 'அதைச் செய், இதைச் செய்' என்று கூறாமல் "புரிந்துகொள்" என்ற ஒரு போதனையை மட்டும் சொல்கிறார். அவரிடம் பேச, பழக, அவருடன் இருக்க அவரிடம் இருந்து ஒரு தடையும் இல்லை. (நம் மனதில் வேண்டுமானால் தடை இருக்கலாம்) உண்மையில் அவர் என்னுடன் பழகியபோது ஒரு தாத்தா தன் பேரனுடன் பழகுவதைப்போலத் தான் பழகினார். ஒருமுறை படித்து, பார்த்து பேசி உணர்ந்தால் தான் இது புரியும். என் இனிய வாசகர்களே, உங்களில் யாராவது வாழ்க்கையில் எந்தத் தேடுதலாகட்டும் - பணம், உறவு, பதவி, கடவுள் - எதுவாக இருந்தாலும் தயவு செய்து நீங்களாகத் தேடித் தேடி நேரத்தை வீணடிக்காதீர்கள். அய்யா அவர்கள் இந்தத் தேடுதலை அவருடைய இல்லற வாழ்க்கையில் இருந்துகொண்டே, 40 ஆண்டுகாலமாகத் தேடி, ஒரு நல்ல Solution-ஐ வழங்கியுள்ளார்கள். இதைவிட ஒரு Simple-ஆன - Easy-யான ஞானப்பாதையை யாரும் இன்றும் போட்டதாகத் தெரியவில்லை. ஒரே வரியில் நான் முடிக்கின்றேன் - உங்கள் அனைத்து பிரச்சினைகளின் ஒரே தீர்வையும், அந்த ஒரு புத்தகத்தில் ஐயா விளக்கியுள்ளார். நீங்கள் இப்போது படித்தால், படித்து முடித்த கணமே நீங்கள் உங்களைப் பிரச்சினையற்றவராக உணர்வீர்கள். நன்றி...

**S. MURALIDHARAN,**
Raghav Software Consulting,
Bangalore. cell:9845304680.

## ஆசிரியர் பகுதி

நமது பாதையின் பயணம், புதிது புதிதாகப் பலரை நமக்கு அறிமுகம் செய்து கொண்டிருக்கிறது. நாம், பாதையில் பயணிக்க வேண்டுமா, அல்லது பாதையே பயணித்து நம்மிடம் வரவேண்டுமா?

இரண்டுமே நடந்து வருகிறது. மொத்தத்தில் நாம் சந்தித்து நமது கருத்துக்களைப் பகிர்ந்து கொண்டு வருகிறோம்.

பாதையில் பூத்த மலர்கள் பலவற்றின் வாசனையும் தொடர்ந்து வீசிக்கொண்டே இருக்கிறது.

நம் பாதையின் பங்காளிகள் - நாம் அனைவருமே பங்காளிகள்தாம் என்பதை மறந்திடவேண்டாம் - பலர் பயனுள்ள பல கட்டுரைகளையும், அனுபவ உரைகளையும் அனுப்பி உள்ளார்கள். விரைவில் அவை வெளியிடப்படும். பத்திரிகையின் பக்கங்களையும் அதிகரிக்க முடிவு செய்துள்ளோம்.

இதயபூர்வமான ஈடுபாட்டுடன் பலர் நன்கொடைகளையும், நன்கொடைச் சந்தாக்களையும் அனுப்பிக் கொண்டிருக்கின்றனர். தனித்தனியே அவர்களுக்கு நன்றியை இதன்மூலம் தெரிவித்துக் கொள்கிறோம்.

புதிய செய்திகள் :

28-11-2011 மாலையில் சென்னை, வேளச்சேரி சமீபமுள்ள கீழ்க்கட்டளை எனும் இடத்தில் திருமதி. நாகேஸ்வரி ஏற்பாடு செய்திருந்த கூட்டத்தில் அய்யா உரையாற்றினார்.

29-11-2011 காலையில் கலைஞர் தொலைக்காட்சிக்காக அய்யாவிடம் நேர்காணல் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. நிகழ்ச்சி 6-12-2011 அன்று ஒளிபரப்பப்பட்டது.

ஆசிரியர் - A. செந்தில்நாதன், 99421 81933

## ?கேள்வி பதில்¿

**மனதில் தோன்றும் முறையற்ற காம உணர்வை எதிர்கொள்வது (அ) போக்குவது எப்படி? குற்ற உணர்ச்சிகளிலிருந்து விடுபடுவது எப்படி? ஞானவிடுதலை சாத்தியமா?**

சராசரி மனிதர்கள் இதைப்பற்றி அக்கறை கொள்வதில்லை. ஆனால் ஆன்மிக வழியில் பயணிப்பவர்களில் பலர் இதை ஓர் அடிப்படைப் பிரச்சினையாகவும், அன்றாடப் பிரச்சினையாகவும் எதிர்கொள்கின்றனர்.

இயற்கையில் எல்லா உயிரினங்களுக்கும் எதிர்பாலினத்தின் மீது ஈர்ப்பு உண்டு. அதுபோல் தான் நமக்கு ஏற்படும் காம உணர்வும். ஆண்களுக்கு - பெண்கள் மேல் ஈர்ப்பு உணர்வு ஏற்படுவதும், பெண்களுக்கு ஆண்கள் மேல் ஈர்ப்பு உணர்வு ஏற்படுவதும் இயல்பு. இப்படி ஒரு ஈர்ப்பு உணர்வு ஏற்படுவதாலே நம்மை நாமே கடையனுக்கும் கடையன் என்றும், நாம் ஓர் அற்பமான பிறவி என்றும், மேலும் நம்மைத் தவிர மற்றவர்கள் நன்றாக இருப்பதாகவும் நாம் மட்டும் இப்படி ஓர் அசிங்கமான, கேவலமான, மனநிலையில் இருப்பதாகவும் எண்ணிக்கொள்ளவேண்டாம். நமக்கு எல்லாம் ஞானவிடுதலை என்பது இந்தப் பிறவில் சாத்தியமே இல்லை என முடிவு கட்டவேண்டாம். இப்படிப் போராடிக் கொண்டு இருக்கும் மனத்திற்கு என்னதான் தீர்வு? எப்படித் தான் விடுதலை அடைவது?

நமது உடலின் அக உறுப்புகள் எப்படிச் செயல்படுகின்றன என்பதை நன்றாகப் புரிந்து கொண்டாலே போதும். உதாரணமாக இதயம், நுரையீரல், கிட்னி போன்ற அக உறுப்புகள் அனைத்தும் தாமாக செயல்படுகின்றன (அ) இயங்குகின்றன. நமது அகத்தின் இயக்கம் நமக்குக் கட்டுப்பட்டது கிடையாது. அந்த இயக்கத்தை நாமாக இயக்கவோ, கட்டுப்படுத்தவோ முடியாது. அதன் இயக்கம் அதன்போக்கில் தான் இயங்கும். அதுபோல் தாமாக ஏற்படும் உணர்வுகளும் தாமாகவே மறைந்துவிடும்.

தாமாக ஏற்படும் காம உணர்வின் ஆயுள் 1/2 வினாடி மட்டுமே. தாமாக ஏற்படும் அந்த உணர்வை, நமக்கு விருப்பமானது என்று ஆதரிப்பதோ (அ) வரவே கூடாது என்று எதிர்ப்பதோ என்பது அந்த உணர்வை நாமாகப் பற்றிப் பிடிப்பதுவே ஆகும். அப்படி அந்த உணர்வை நாமாகப்பற்றிக் கொள்வதனால் மட்டுமே, உணர்வு பலமடைந்து உணர்ச்சியைத் தூண்டி தீய செயல்களை நமது கட்டுப்பாட்டையும் மீறி செயல்படவைக்கின்றது. நமக்கு ஏற்படும் உணர்வுகள் நாம் விரும்பி ஏற்படுத்தியதில்லை. அப்படி ஏற்படுவது நமது கட்டுபாட்டிலும் இல்லை. தாமாக ஏற்பட்ட அந்த உணர்வை நாமாக ஆதரிப்பதோ, எதிர்ப்பதோ நமது அறியாமை என்னும் முட்டாள் தனம் என்பதைப் புரிந்து கொண்டாலே போதும். அந்த நிலையில் தாமாகவே அந்த மனதைப் பொறுத்தவரையில் முறையானது, முறையற்றது என எதுவும் கிடையாது. அப்படித் தோன்றும் உணர்வும், தோன்றி மறையும் தருவாயிலேயே நம்மால் அடையாளம் கண்டுகொள்ளப்படுகிறது. மனதில் தோன்றும் காம உணர்வை, குற்ற உணர்ச்சியாக எடுத்துக் கொள்ளத் தேவையில்லை. இந்த உணர்வு தான் வரவேண்டும், இந்த உணர்வு வரக்கூடாது என்ற எந்தக் கட்டுபாடும் மனதிற்குக் கிடையாது. இது போன்ற உணர்வு நமக்கு வரவேகூடாது என்று போராடும்போது தான், மறையும் தருவாயில் இருக்கும் உணர்வுக்கு நாமாக உயிர் கொடுத்து புதுப்பித்துவிடுகிறோம். மேற்கூறிய அனைத்தும் அகத்திற்கு மட்டுமே பொருந்தும்.

புறம் என்று வரும்போது, இயற்கை அமைப்பில் விலங்கினத்திற்கு எந்தக் கட்டுப்பாடும் கிடையாது. ஆனால் மனிதர்களாகிய நாம் ஒன்றுகூடி ஓர் ஒழுக்கமான சமுதாயமாக வாழவேண்டி இருப்பதால், புற ஒழுக்கம் அவசியம். புறத்தில் செயல் என்று வரும்போது, ஒவ்வொருவரும், தான், குடும்பம், உறவுகள், சமுதாயம், நாடு என அனைத்து சட்ட ஒழுங்கினையும் கடைபிடிக்க வேண்டியது அவசியம்.

நமது உடல் இயக்கத்திற்கு ஆதாரமான ஒரே சக்திதான் அகத்திற்கும், புறத்திற்கும் செயல்படுகிறது. அகத்தின் இயக்கம் தாமாக இயங்குகிறது. நாம் அதற்கு எதுவும் செய்யத் தேவையில்லை என்பதால், அக முரண்பாட்டிற்கு செலவாகிக் கொண்டிருந்த மனோசக்தி, இப்போது புற இயக்கத்தின் பக்கம் மாற்றமடைகிறது. இதனால் புறத்தில் நமது செயல்கள் அனைத்தும் முழுமையான செயல்களாக மலர்கிறது. மேலும் இதுவரை நாம் செயல்படாத வெவ்வேறு பரிமாணங்களில் புதுப்புது யுக்திகளுடன் செயல்படுவதற்கான வாய்ப்புகள் அமைகின்றன. இவை அனைத்தும் புற வாழ்விற்கான நல் வாழ்வாதாரங்களாக அமையும். 'அகத்தில் செய்வதற்கு ஒன்றும் இல்லை; புறத்தில் எல்லாமே உண்டு' என்று தொடர்ந்து பயணிக்கும் போது, நமக்குத் தெரியாமலேயே அகச் சுத்திகரிப்பு தானாக நடைபெறுகிறது. இதனால் நம்மை மிகவும் ஆழமாகப் பாதித்த பதிவுகளிலிருந்து நம்மை அறியாமலேயே வெளியேறுகிறோம். இப்படி நாம் செயல்படும்போது நம்மால் ஓர் உயர்ந்த சமுதாயத்தையே உருவாக்க முடியும்.

மேற்கூறியவைகளை நன்றாக அகத்தில் உள்வாங்கிக் கொண்டு புறத்தில் சிறந்த கர்மவீரர்களாகச் செயல்பட அனைவரையும் அழைக்கின்றோம்.

***கலங்கிய குளத்தைத் தெளியவைக்க நாம் எதுவும் செய்யதேவையில்லை.***

**V.A.P. சரவணன்**, சேலம்.
செயலாளர், ஸ்ரீபகவத் மிஷன்,
செல் : 9994205880

# ஜென்கதை

## ‘விலகி நில்’

ஆழ்ந்த தேடல் வேட்டையில் ஒருவர் ஈடுபட்டிருந்தார். ஞானவேட்கை அவரிடம் நிரம்பியிருந்தது. எதை எதைக் கேள்விப்படுகிறாரோ அதையெல்லாம் முயன்று பார்ப்பதே அவரது செயலாயிருந்தது.

பற்றுகளைத் துறப்பதே ஞானவாயிலின் திறவுகோல் என்றனர் பலர். அவர் தன் உடமைகளை உதறினார். தன் சொத்துகளை உதறினார். இருக்கும் இடம் என்று கூட ஒரு பற்றுதல் கூடாதென்று ஊர் ஊராக அலைந்து திரிந்தார். அப்படியும் அவர் மனம் அமைதியுறவில்லை.

வழியில் ஒருவரைச் சந்தித்தார். அவர் முகத்தில் நிலவிய சாந்தமும் கண்களில் தென்பட்ட எல்லையில்லாப் பேரானந்தமுமே அவர் ஒரு ஜென் குரு என்பதை உணர்த்தின.

அந்த குருவை வணங்கினார்.

‘குருவே! நான் ஞானத்தைத் தேடி அலைகிறேன்!’ என்றார்.

"அப்படியா?" என்றார் குரு.

"ஆம். நான் பாசங்களை உதறிவிட்டேன். உடைமைகளை உதறிவிட்டேன். பற்றுகளைத் துறந்துவிட்டேன். இப்போது என் மனம் நிச்சலனமாய் இருக்கிறது!" என்றார்.

"அப்படியா? சரி, அதை விட்டுவிடு!" என்றார் குரு.

வந்தவர் முகத்தில் பெரும் திகைப்பு.

"குருவே! நான் தான் எல்லாவற்றையும் விட்டு விட்டதாகச் சொன்னேனே? இப்போது என் மனதில் வெறுமை தானே குடிகொண்டு இருக்கிறது!"

"சரி, அதையும் விட்டுவிடு!" என்றார் குரு.

"அதை எப்படி விட முடியும், சுவாமி?" என்றார் வந்தவர்.

"விடமுடியாதா? நல்லது. அப்படியானால் அதனைச் சுமந்து கொண்டு திரி!" என்றார் குரு.




இதை உதறிவிட்டேன், அதை விலக்கிவிட்டேன் என்று பேசிக் கொண்டிருப்பவர்கள் எதையும் உதறமுடியாது. எதனின்றும் விலக முடியாது.

ஞானம் என்பது வெளியே பதுக்கப்பட்ட ஒரு பொருள் அன்று. அதனை எவரும் தேடித் திரிந்து கைப்பற்றுவதும் இல்லை.

விட்டதை விட்டுவிட்டு, விட்டேன் என்ற நினைவையும் விட்டுவிட்டு சும்மா இருத்தலே ஞானம்.

நன்றி : (பக்-57 ஜென் தத்துவக் கதைகள் - சிக்ஸ்த் சென்ஸ் பப்ளிகேசன்ஸ்)

தொகுப்பு :
திரு. சரண்குமார்
Zen Sang அக நூலகம், திருச்சி.
செல் : 9894012639

## ஞான விடுதலை

இவ்வுலகில் உள்ள அனைத்து உயிரினங்களும் தெரிந்தோ, தெரியாமலோ இன்பத்தை விரும்புகின்றன. துன்பத்தை வெறுக்கின்றன. ஒரு செல் உயிரான அமீபா முதல், மனித இனம் வரை இதற்கு விதிவிலக்கல்ல.

இன்பத்தைத் தக்க வைத்துக்கொள்ள விரும்பும் நமக்கு, துன்பம் தவிர்க்க இயலாத ஒன்றாகிவிடுகிறது. துக்கத்தை விலக்கவும் வழி தெரியவில்லை, நிம்மதியை தக்கவைத்துக்கொள்ளவும் இயலவில்லை. ஏன்? இந்த நிம்மதியை அடையத் தடையாக இருப்பது எது? எங்கே நாம் தவறவிடுகிறோம்? எது நமக்குப் புரியாமல் போகின்றது? ஓர் எளிய உதாரணம் மூலம் முயற்சிப்போம்....

அனைத்து வாசனைகளும் (நல்ல வாசனை - (சந்தனம்) + கெட்ட வாசனை - (சகதி) ) ஒருங்கே கலந்த ஓர் ஊதுவத்தியை கற்பனை செய்துகொள்வோம். இந்த ஊதுவத்தி காலை முதல் இரவு வரை எரிவதாகக் கொள்வோம். புகை வந்து கொண்டே இருக்கின்றது. ஊதுவத்தியில் சந்தனப்பகுதி வரும்போது சந்தன வாசனை, நறுமணமாக வீசுகின்றது. ஊதுவத்தியில் சகதிப்பகுதி எரியும்போது, துர்நாற்றம் வீசுகிறது.

இப்போது புகை நினைக்கிறது - "இந்த சந்தன வாசனை மிகவும் நறுமணம் கமழ்வதாக உள்ளது. இதுவே எப்போதும் நிலைத்து இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!" என, அந்தச் சந்தன வாசனையைக் கட்டிப்போடப்பார்க்கிறது.

சகதி வாசனை மிகவும் துர்நாற்றம் உடையதாக இருப்பதால், ‘புகையான சகதி வாடை எனக்கு வேண்டவே வேண்டாம். இப்போதே இந்தத் துர்நாற்றம் போய்விட வேண்டும்’ என, தவியாய்த் தவிக்கிறது; போராடுகிறது. இந்தப் புகையினால் சந்தன வாசனையைத் தக்க வைத்துக் கொள்ள இயலுமா? அதே போல இந்த புகையினால் சகதிப் பகுதியிலிருந்து வெளிவரும் துர்வாடையைத் தவிர்க்கமுடியுமா? ஒருவேளை இந்த புகையானது ஒழுக்க விதிகளைக் கடைபிடிப்பதாலோ,

பூஜை, ஜபம், தியானம், சாமதிநிலை பழகுவதாலோ அல்லது ஹோமம் வளர்ப்பதாலோ, ஆசனம், பிராணாயாமம் போன்ற பயிற்சிகளில் ஈடுபடுவதாலோ, இந்தப் புகையானது நிரந்தரமாக நறுமண வாசனைப் பகுதியை மட்டும் வைத்துக் கொண்டு, துர்நாற்றத்தைத் தள்ள இயலுமா?

முடியவே முடியாது என்பது மிகச் சாதாரணமானவர்களும் அறிந்த எளிய உண்மை, ஏனெனில் புகை என்பது கர்த்தா அல்ல. புகை என்பது விளைவே. ஊதுவத்திதான் "கர்த்தா". ஊதுவத்தி எப்படி நிர்மாணிக்கப்பட்டு உள்ளதோ, அதற்குத் தகுந்தாற்போல் தான் வாசனைகளும் வெளிவரும்.

புகையின் விருப்பத்தின்படியோ, புகையின் தீர்மானத்தின்படியோ ஊதுவத்தியில் இருந்து வாசனையை, புகையால் வரவழைக்க இயலவே இயலாது. புகையானது தனது பராக்கிரமத்தினாலோ, வல்லமையினாலோ, முழு முயற்சியுடன் வாழ்நாள் முழுவதும் போராடினாலும் ஒருக்காலும் ஊதுவத்தியில் எழும் வாசனையை மாற்றவோ திருத்தவோ இயலாது என்பது அனைவரும் அறிந்த உண்மை. காலை முதல் இரவு வரை போராடிக் கொண்டே இருக்கும் இந்தப் புகைக்கு என்னதான் வழி உள்ளது?

புகை - தன் கையறு நிலையைப் புரிந்து கொண்டாலே போதும். வெளிக்கிளம்பி வரும் வாசனைகளைத் தன்னால் மாற்றவோ, திருத்தவோ, தக்கவைத்துக் கொள்ளவோ, தள்ளிவைக்கவோ முடியவே முடியாது என, தனது உண்மை நிலையை உணர்ந்தாலே போதுமானது. மேலும் அனைத்துப் புகையும் தற்காலிகமாக கடந்து செல்லக்கூடியதே; அனைத்துப் புகையும் தற்காலிகமாகத் தோன்றி மறையக் கூடியதே; அனைத்துப் புகையும் சதா மாறுதலுக்கு உட்பட்டதே என புகையானது தனது யதார்த்த நிலையை உணர்ந்து தன்னை அப்படியே முழுமையாக, சுதந்திரமாக, இது நல்ல வாசனை, இது கெட்ட வாசனை எனத் தீர்ப்பளிக்காமல் - ஊதுவத்தியில் இருந்து தாமாக எழும் வாசனைகளை, தங்கு தடையில்லாமல், புகையானது தன்னை பிரவகித்திட அனுமதிக்குமேயானால், அதுவே புகையின் விடுதலை.

இவ்வாறே நமது ஆழ், அடி மனதான அகர்பத்தியில் இருந்து காலை விழிப்பு நிலை முதல், இரவு கனவு நிலைவரை புகையாக உணர்மனம் சூழ்நிலைக்கேற்ப உணர்வுகளைத் தள்ளிக் கொண்டே இருக்கிறது. இந்த உணர்மன இயக்கத்தில், உடன்பாடாகவோ, எதிர்மறையாகவோ - தானே எழுந்து மறைந்து விடும் உணர்வுகளை நாம் பற்றிக் கொள்ளாத பட்சத்தில், நமக்கு இயல்பாக ஏற்படும் உணர்வுகளைத் தவிர வேறு எந்த உணர்வுகளையும் எதிர்பார்க்காத பட்சத்தில், அனைத்து உணர்வுகளையும் முழு மனதோடு ஏற்றுக்கொண்டு இருந்திடவும், மறைந்திடவும் அனுமதிக்கும் பட்சத்தில் - பகவான் ஸ்ரீ ரமணரின் ஆன்ம வித்தை பாடலான

"ஐயே! யதிசுலபம் - ஆன்மவித்தை ஐயே! யதிசுலபம்" என்பதை இந்த "ஞானவிடுதலை" என்ற சிறுநூலின் மூலம் "ஸ்ரீபகவத் ஐயா" அவர்கள் மிக அழகாகவும், ஆணித்தரமாகவும் இந்த எளிய புரிதலுக்கு நம் அனைவரையும் அழைத்துச் செல்கிறார். அதோடு நில்லாமல் நம்மையும் பாட வைத்துவிடுகிறார்..... ஐயே! அதி சுலபம் ஆன்ம வித்தை! என.....

## உணர்வுப் பிரவாகம்




நமது உணர்வுகள் அனைத்தும் சமமானவைகளே
உயர்ந்த உணர்வென்றோ, தாழ்ந்த உணர்வென்றோ,
சரியான உணர்வென்றோ, தப்பான உணர்வென்றோ,
சாதாரண உணர்வென்றோ, தெய்வீக உணர்வென்றோ,
எதற்கும் சிறப்பான முக்கியத்துவம் கிடையாது.
அனைத்து உணர்வுகளும் கடந்து செல்லும்
தற்காலிக உணர்வுகளே!
அனைத்து உணர்வுகளும் நமது உடல் உணர்வுகளே!

உண்மையில் கடந்து செல்லும் உணர்வு மட்டுமே உள்ளது.
உணர்வுகள் தாமாக வந்து தாமாகவே போய்விடும்.
அவற்றை எதிர்த்துப் போராடுவோமாயின்,
நாம் வாழ்நாள் முழுதும் போராடினாலும் அவை முடிவுக்கு
வாரா! "நமது உணர்வுகளெல்லாம் நகர்ந்து செல்ல
அனுமதிப்பதே ஞானநிலை"!

ஓஷோ இராஜேந்திரன்,
சென்னை. செல் : 9445264147

## இலவச Download

ஸ்ரீ பகவத் ஐயாவின் தமிழ்ப்புத்தகங்கள் அனைத்தையும், ஆங்கிலப் புத்தகங்கள் நான்கையும் www.pravaagam.org என்ற இணைய தளத்திலிருந்து இலவசமாக Download செய்து கொள்வதற்கு ஏற்ற வகையில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. தங்கள் பெயர் மற்றும் முகவரியையும் பதிவு செய்து விட்டு Download செய்து கொள்ளலாம்.

ஸ்ரீ பகவத் மிஷன் வெளியீடான "பகவத் பாதை" மாத இதழையும் www.pravaagam.org என்ற இணைய தளத்திலிருந்து இலவசமாக Download செய்து கொள்ளலாம்.

ஐயாவின் தமிழ், ஆங்கில நூல்கள் மற்றும் மாத இதழ் அனைத்தையும் இலவசமாக நீங்களும் படித்து, உங்களுடைய உள்நாட்டு, வெளிநாட்டு நண்பர்களுக்கும் இந்த வசதியை தெரியப்படுத்தி அவர்களும் பயன்பெற உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன்

தவிர்க்க இயலாத காரணத்தினால் இந்த மாத இதழ் சிறிது காலதாமதமாகிவிட்டது.

### குறிப்புகள்

கேள்வி பதில் பகுதிக்காக வாசகர்களிடமிருந்து கேள்விகளை வரவேற்கிறோம்.

நீங்கள் இம்மாத இதழை மாதந்தோறும் உங்களின் email மூலம் பெறுவதற்கு உங்கள் email ID, தொலைபேசி எண், அலைபேசி எண் மற்றும் வீட்டு முகவரியையும் பதிவு செய்வது அவசியம்.
bagavathpathmonthlymagazine@gmail.com

**நமது இதழை விரும்பிப் படிக்கக்கூடிய அன்பர்களின் முகவரிகளை அனுப்பிவையுங்கள்.**

## ஸ்ரீபகவத் அவர்களின் நூல்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | நீங்களும் ஞானியாகலாம் | – | ரூ. | 40 |
| 2. | கவலைகள் அனைத்திற்கும் தீர்வு | – | ரூ. | 100 |
| 3. | ஞானமலர்வு | – | ரூ. | 15 |
| 4. | தியானத்தை விடு ! ஞானத்தைப் பெறு ! (நர்மதா) | – | ரூ. | 90 |
| 5. | சும்மா இரு | – | ரூ. | 30 |
| 6. | நான் யார் ? | – | ரூ. | 20 |
| 7. | சூன்யப் பிரவாஹம் (நர்மதா) | – | ரூ. | 65 |
| 8. | ஞானப் பட்டறை | – | ரூ. | 60 |
| 9. | ஆன்மாவைத் துறந்து ஆன்மாவாக இரு | – | ரூ. | 60 |
| 10. | தேடிப்போக வீடு இல்லை | – | ரூ. | 30 |
| 11. | ஸ்ரீ பகவத் பார்வையில் ஜென் கதைகள் | – | ரூ. | 40 |
| 12. | சத் தரிசனம் | – | ரூ. | 60 |
| 13. | ஆகாமிய கர்மா | – | ரூ. | 60 |
| 14. | ஞான விடுதலை | – | ரூ. | 50 |
| 15. | ஆன்ம ஞான ரகசியம் | – | ரூ. | 50 |
| 16. | அனுஷ்டான ஆன்மீகம் | – | ரூ. | 150 |

English Books

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | Don't Delay Enlightenment | – | ரூ. | 100 |
| 2. | Give up Meditation ! Get Enlightenment ! | – | ரூ. | 300 |
| 3. | Renounce God ! Be God ! | – | ரூ. | 200 |
| 4. | Absolute Reality | – | ரூ. | 150 |

**All English Books are Available in Higgin Bothams Book Stores**

Audio Books

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | ஞான விடுதலை | – | ரூ. | 150 |
| 2. | நீங்களும் ஞானியாகலாம் | – | ரூ. | 100 |
| 3. | Don't Delay Enlightenment | – | ரூ. | 150 |
| 4. | ஞான மலர்வு – ஐயா உரை (Audio) | – | ரூ. | 100 |
| 5. | கர்ம வினைகளுக்கு அறிவியல் ரீதியான பரிகாரங்கள் – ஐயா உரை (Video) | – | ரூ. | 100 |

நூல்களைப் பெற :

## ப்ரவாகம் பப்ளிகேஷன்ஸ்

*31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636 003. தமிழ்நாடு, இந்தியா*

தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

**Book packet** containing printed books

To

*If undelivered please return to:*




**SRI BAGAVATH MISSION**
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**Mobile : 94432 90559, 99942 05880**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : jeevamani@pravaagam.org

Published by Shri. V.A.P. Saravanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem - 636 003. Tamilnadu,INDIA.
Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem - 636 003. Editor : Shri. A.Senthilnadhan, cell : 99421 81933.